உ

கடவுள் துணை.

No. 2. நெ. உ.



# வஜ்ரடங்கம்.

கிறிஸ்துமத கானனகுடாரி

இயற்றியது.

# VAJRA DANKAM

OR

# THE DIAMOND AXE.

*A Tamil Pamphlet for the use of Hindus.*

BY

**CHRISTUMATHA KANANA KUDARI.**

PUBLISHED BY A MEMBER OF THE

H. V. E. SOCIETY.

Madras:

PRINTED AT "THE MADRAS RIPON PRESS,"

316, *Thumbu Chetty Street.*

1888.

விலை பை ஆறு-] [Price 6 Pies.

உ

கடவுள் துணை.

# முகவுரை



இரண்டொருக்குச் சிற்சில மாசங்களுக்குமுன்னே கிறிஸ்தவரில் ஒருவர் "சிவனுந்தேவனா?" என்னும் முகவுரையோடு அழுக்குப் பொருள்கள் பொதிந்த அழுக்குச்சொற்களால் அழுக்கு வாக்கியங்கள் தொடுத்து ஓர் இழிந்த துண்டுப் பத்திரிகை எழுதிவிட்டமைகண்டு, நம்மனோர்மயங்காவண்ணம் அதனைக் கண்டித்து "தீய நாவுக்கு ஆப்பு" என்னும் புஸ்தகத்தை முதற்கண்ணே முதல் நெம்பராகப் பிரசுரித்தேம். ஓர் பனையைப் பிளத்தற்கு ஆப்பு முன்னரோ வேண்டப்பட்டுப் பின்னர் அதனைச் செவ்விதாகப்பிளந்துமுடித்தற்கு "டங்கம்" எனப்படும் கோடரி வேண்டப்படுமாதலின், அந்தக்கிறிஸ்து மதத்தை உயர்த்தி இந்துமதத்தை இகழத்தொடங்கிய நாக்கைப் பிளத்தற்கு உபயோகிக்கப்பட்ட ஆப்புக்கிசைய, வஜ்ர (வயிர) டங்கம் என்னும் இப்புஸ்தகத்தை யாவர்க்கும் உபயோகமாகும்படி அதற்கடுக்க வெளியிட்டேம்.

(சி. கா. கு.)

---

இவ் ... தும்
இந்துக் ... கள்
இந்தும ... தம்
என்று ... த்தி
லே கூ ... ம்,
நம்பி ... வ்
தவச்சி ...
ரஞ்செய்து தம்தம் அரும்பெண்களுக்குக் கல்விக் கற்பித்
கொடுக்கவும் முயன்றிருக்கின்றார்கள். அவர்கள் எண்ணி
ண்ணங்கள் வீணானவையென்றும் துன்பந்தரத்தக்கவை
றும் இந்த அத்தியற்புத விலைகுறைந்த புத்தகத்தினால்
ப்படும். அன்றியும் இதில் கிறிஸ்துமத ஆபாசங்களையும்
மத உண்மைகளையும் எடுத்துக்காட்டி வரப்படும்.

இதன்விலை பை மூன்று.

நும்மனைவியரும், நும்மக்களும் உண்டுடுத்துக் களித்துவிட்டு நல்ல பழங்களும் நல்ல சலமும் அகப்படாத நாடுகளிலேயேயக் கிறிஸ்து சமயத்தைப் பிரசரியாது அந்நாட்டுக்குடிகளை நரகத்துக் காளாக்கலாமோ? பாவம்! பாவம்! இப்படிக் கிறிஸ்துவும் அவர் சீடரும் போதித்தார்களா? நமது தேசத்தாராய், நமது ஜாதியாராய், நமது வருணத்தாராய், நமது பாஷையினராய், நமது பழக்கத்தினராய் உள்ள நமது வெள்ளைச் சகோதரர்கள் கிறிஸ்து இப்படிப்பட்டவரொன்று தானும் அறியாது நிரீச்சுரவாதிகளாய்ப் போக, நீவிர் அன்னியதேசத்தாராய், அன்னிய சாதியாராய். அன்னிய வருணத்தராய், அன்னிய பாஷைக்காரராய், அன்னிய பழக்கமுடையவராய் உள்ள இந்தியா இலங்கைவாசிகளுக்குக் கிறீஸ்துசமயம் போதிக்க வந்தமைக்குக் காரணம் உங்கள் பண வாஞ்சையோ? பழ வாஞ்சையோ? சல வாஞ்சையோ? தரித்திரக் கொடுமையோ! கொல்லவேலை, தச்சுவேலை, விறகுவெட்டி விற்கும் வேலை, நெசவு வேலை, மீன்பிடிவேலை, குயவவேலை, செம்மாரவேலை, க்ஷௌரவேலை முதலிய கஷ்டவேலைகளைச் செய்து வருந்தாது சுகமே வாழ்ந்திருக்கலாமென்னும் வாஞ்சையோ? சொல்லுங்கள்! பதினாயிரம் ரூபா மாசம் ஒன்றுக்குக் கொடுத்தாலும் இந்தியா இலங்கையிலுள்ளா ரொருவன் அமெரிக்கா முதலிய தூரதேசங்களுக்குத் தனது மனைவி மக்கள் சகோதரர் முதலாயினோரைப் பிரிந்துபோய் நீடித்து வசிக்க உங்களுக்குப்போல அவன் மனமும் இசையுந்தானோ? இப்படிப் பட்டவறிய இலங்கை இந்தியாவிலுள்ளார்க்கும் இந்த எண்ணம் உதியாதவிடத்து, மாசம் ஒன்றுக்கு இருநூறு முந்நூறு ரூபாவுக்கு ஆசைப்பட்டு நீவிர் உமது தேசம் விடுத்து உங்கள் பெண்டிர் பிள்ளைகளை ஓர்கால் விடுத்துவிட்டும், ஓர்காற் கூட்டிக்கொண்டும் இந்த நீடித்த தூரத்துள்ள இந்தியா இலங்கை என்பவைகளுக்குப் போந்தது மிகவும் நூதனமே! அஞ்ஞானிகள் மேற்கொண்ட காருண்ணியத்தாலும், கிறிஸ்து சமயத்துண்மை போதிக்க வேண்டுமென்னும் உருக்கத்தினாலுமே நீவிர் ஈண்டுப் போந்தீரென்று குதர்க்கம் பறைவீர்; முந்திக்கூறிய நியாயத்தால் அது ஒடிக்கப்பட்டொழியும். நமது சாஸ்திரங்களிலே நீவிர் முன்னாளையிலே திருடிய உண்மையை நீவிர் நமக்கு இப்போது போதிக்கவந்தமை நமக்கு மிகுதியும் துக்கத்தையும் ஆச்சரியத்தையும் விளைக்கின்றது.

---

# நம்பிள்ளைகளைப் பாதிரிகூட்டம் சாரவிடப்படாதென்பது.

எருதும் பசுவுமாகக் கலக்குமிடத்து அவற்றிற்கு எதிரிலே சிறிது தூரத்திலே புலியொன்றை நிறுத்திவிட்டால், அந்தப்பசு சினைகொண்டு கன்று *ஈனுங்கால் அது புலியின் அதிதீரமாகிய வேசகுணம்முதலியவைகள் பொருந்தியதாகும். அதுபோல் எவ்வெவ் உபாத்தியாயர்களிடத்திலே எந்தெந்த மாணாக்கர் படிக்கின்றாரோ அவ்வவ் உபாத்தியாயர்களிடத்திலே கல்வியையும் குணமுதலியவைகளையும் அந்தந்த மாணாக்கர் பயில்கின்றார். தாழ்ந்தகுலத்துத் தாழ்ந்தவியற்கையுடைய ஒருத்தி மற்றோர் உயர்ந்தகுலத்து உயர்ந்தவியற்கையுடைய ஒருவனால் விவாகஞ் செய்யப்பட்டபோது அவள் அவனுடைய இயற்கை முதலியவைகளிலே சிறிது சாமர்த்தியமுடையளாகின்றாள். இதுநோக்கியே "யதாதேவாததாபக்தா" என்றார் பிறரும். இங்ஙனம், அதனால் துன்மதியும் நன்மதியும் ஒவ்வொருவர் சேர்க்கையினாலும், தியானத்தினாலும் பிறக்கின்றன. வெள்ளைச்சீலையிலே செந்நிறத்தையும் ஏற்றலாம், கருநிறத்தையும் ஏற்றலாம், மற்றெந்நிறத்தையும் ஏற்றலாம். அதுபோல, ஆசைமுதலியனபெரிதும் துறந்துநின்ற சிறுவயசுடைய சிறுகுழந்தையின் மனசை எப்படியும் வசப்படுத்தலாம். அந்த மனசிலே கிறிஸ்துமதத்தையும் ஏற்றலாம், கிரேக்குமதத்தையும் ஏற்றலாம், அருகமதத்தையும் ஏற்றலாம், எந்த மதத்தையும் ஏறறலாம். அப்பொழுது எது ஏற்றப்பட்டதோ, அது ஓர்போதும் அழிவதில்லையாம். இதுநோக்கியே "இளமையிற்கல்வி சிலையில் எழுத்து" என்றார் பிறரும். கிறிஸ்துமதத்திலே நன்குபடித்தவருக்கு இந்து சமயத்தைப் புகுத்தத்துணிதல் ஊசியின் கண்ணிலே மற்றோர் பெரிய கப்பற்கயிற்றைச் செலுத்தத் துணிதல் போலாம். மேலே சொல்லப்பட்ட உண்மைகளையோசித்தறிந்த பாதிரிகள்,

1. "பைபிலை வாசிப்பவர் தம்மனத்தைக் குழந்தையின் மனத்தைப்போல வைத்துக்கொள்ளவேண்டும்."

2. பைபிலுக்கு விரோதமாகிய எண்ணங்களை மனத்திலே கொள்ளப்படாது.

3. பைபிலுக்கு விரோதமான புஸ்தகங்களை வாசிக்கப்படாது.

4. பைபிலைப் படிக்கும்போது "நியாயமிருந்தாற்றான் நம்புவேன்" என்று சொல்லப்படாது.

5. சிறுபிள்ளைகளுடைய மனம் இளமையில் எதைப்பற்றுகின்றதோ, முதுமையினும் அதையே பற்றுமாதலினால் கிறிஸ்தவர்கள் தங்கள் சிறுவரைத் தங்கள் ஒழுங்குகளுக்கு விரோதமானவர்களுடைய சகவாசஞ் செய்விக்கப்படாது."

என்று போதிக்கின்றார். இந்தப்பாதிரி சொல்லிய கிறிஸ்த விதி நமது இந்துமதவிதிக்கு இசைய மாற்றப்படல் வேண்டுமென்பது தப்பாது யூகிக்கத் தக்கது. ஆகவே, துஷ்டமதத்தராகிய கிறிஸ்தவர் சகவாசம் ஒழிக்கப்படல் வேண்டுமென்பதும் சிஷ்ட மதத்தராகிய இந்துக்கள் சகவாசம் தழுவப்படல் வேண்டுமென்பதும் நன்கு தாபிக்கப்படும். இந்து மதத்தை விடுத்துக் கிறிஸ்துமதப்பிரவேசஞ்செய்த அன்றைக்கே நமது இலக்குமிதேவியார் அவர்முகவாசம் வெறுத்து வனவாசம் வேண்டித் துறவறநிலை பூணவேண்டுவார்.

---

# யேகோவா என்னும் துஷ்டதேவதையினும் நமதுபரமேசுவரர் அருள்வள்ளலாமென்பது

---

"(பரமேசுவரர் எனப்படும்) யாம் மனிதர் எனப்படுவார் யார்க்கும் ஒரேபடித்தாய் இருப்பேம். எவர் அன்பினோடு மற்றைத்தேவர்களை வழிபடுகின்றாரோ அவர் நம்மை வழிபடுகின்றார் என்று அறியாது நம்மையே வழிபடுவோராயினர். அவ்வவர் வணக்கமெல்லாம் அங்கீகரிப்பவரும் நாமே ; அவ்வவர்க்கு அநுக்கிரகப் பயனாயிருப்போரும் நாமே."

"I (Paramesvara) am the same to all mankind. They who honestly serve other Gods, involuntarily worship me I am he who partaketh of all worship, and I am the reward of all worshippers."

இவ்வுண்மை இந்தியாவிலே வழங்கும் சைவ வைஷ்ணவ சாஸ்திரங்களினாலே தொனிக்கின்றன.

"எவ்வெவர் தம்மையேனும் யாவரேயெனினும் போற்றி
னவ்வவ ரிடமாக்கொண்டே யவர்க்கரு டருவாய்போற்றி
மெய்வரு தெளிவிலுன்னை வெளிப்பட வுணர்ந்துளோர்க்கு
தெய்வதபோகமுத்தி சிறப்பொடுதருவாய்போற்றி." [த்

"தமருகந்த தெவ்வுருவ மவ்வுருவந் தானே
தமருகந்த தெப்பேர் மற்றப்பேர்—தமருகந்த
தெவ்வண்ணஞ் சிந்தித் திமையா திருப்பரே
லவ்வண்ண மாழி யானும்."

உருத்திரனென்றும் விஷ்ணுவென்றும் சைவசமயத்திலும் வைஷ்ணவசமயத்திலும் வேறு வேறு திருநாமங்களோடு விளங்கிய பரமேசுவரக்கடவுளுக்கு, "அவரைவணங்காதே! இவரை வணங்காதே! என்னை வணங்கு!" என்னும் பொறாமைக் கருத்து நிகழாமையினால் நமது இந்துசமயக்கடவுளாகிய பரமேசுவரக்கடவுளுடைய சத்திய ஞானானந்த திருவருட்பெருக்கின் அளவுக்குமுடிவொன்று சொல்லலுமாமோ? இங்ஙனமாகவும், யேகோவாவென்னும் துஷ்டதேவதையானது தனது ஊத்தைவாய் பிளந்து மொழிந்த பொறாமை கலந்த சிறிதும் அருளில்லாக் கொடிய வாசகங்களைச் சிறிது செவிசாய்த்துக் கேண்மின்!

"என்னையன்றி உனக்குவேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம்; நீ அவைகளை நமஸ்கரிக்கவும் சேவிக்கவும்வேண்டாம்; உன்தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து என்னைப் பகைக்கிறவர்களைக் குறித்து பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறைமட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன்." (யாத். 20:3-5)

சாமானிய அறிவில்லா மனிதன்தானும் தனக்கு உயிர்ச்சேதம் விளைக்கத் தக்க தனது பகைவனையேனும் அவன் மகனையேனும் காண நேர்ந்தால், அவன் அவனை யாதும் கேடுசெய்யாது ஒவ்வோரிடத்திலே நண்பு பாராட்டி அன்பினோடு நன்றிசெலுத்தினமையை யாம் கண்டுமிருக்கின்றேம், கேட்டுமிருக்கினறேம், வாசித்துமிருக்கின்றேம். அவன் யேகோவாவைப்போலத் தன் சத்துருவிடத்திலும், சத்துருவின் பிள்ளையிடத்திலும், பிள்ளையின் பிள்ளையிடத்திலும், பொறாமை பாராட்டிக் கேடுவிளைக்கக் கண்டிலம். இந்த ஏழைமைத்தன்மையுடைய அறிவிலாப் பாவி மனுஷனுக்குள்ள அற்ப இர[illegible]

ன் அனுத்துணையேனும் யேகோவா என்னும் துஷ்டப் பிசாசிடத்திற் காணப்பட்டிலதே !!!

ஒரு நாயானது தனக்குத்தனது எஜமான் எத்தனை அடி வீழ்த்தியபோதும், எத்தனை உதை உதைத்தபோதும், வேறெத்தனை கொடுந் துன்பங்கள் கொடுத்தபோதும், அவன் தனக்கு ஓர்காலத் தொருமுறை ஓர் சிறிய உணவு தந்த நன்றியை மறந்து, பொறாமைகொண்டு, அவனைக்கடித்து வருத்தக் கண்டிலம். இந்தப் புழுத்த நாய்க்குள்ள நன்றிகலந்த அன்பு இந்த நாயைப் படைத்தாரெனப்படும் யேகோவாவுக்கு இல்லாதொழிய, யேகோவாவுக்கு உளதாகவேண்டிய அன்பு அவராற் படைக்கப்பட்டதெனப்படும் நாய்க்கு வாய்த்தமை மிகுதியும் ஆச்சரியத்தை விளைக்கின்றது ! விளைக்கவே, இந்துசமயக் கடவுளினும் யேகோவாவுக்கு இரக்கமில்லையாமென்றும்; இந்துசமயக் கடவுள் மாத்திரத்தினுமா ? அவரினும் தாழ்ந்த சாமானிய மனிதரினும் யேகோவாவுக்கு இரக்கமில்லையாமென்றும்; சாமானிய மனிதர்மாத்திரத்தினுமா ? அவரினுந்தாழ்ந்தநாயினும் யேகோவாவுக்கு இரக்கமில்லையாமென்றும் பெறப்பட்டது. ஆகையால், கிறீஸ்தவப்பாதிரிகாள்! நமது சர்வகாருண்ணியமுடைய இந்துசமயக் கடவுளினும் நுமது வன்கண்ணராகிய யேகோவாவைப் பெரியரொன்று சாதிக்கவந்த நுமது துஷ்டக் கடவுள் இரக்கத்திலே எளிய நாய்க்குத்தானும் சிறிதும் ஆற்றாது தோற்றுமடிந்தனரோ ! பாவம்! பாவம்! நீவிர் என்செயவீர்! நுமதுபொறாமைவடிவினதாகிய யேகோவாப் பிசாசு என்செய்யும் ! இனியேனும் வாய் அடங்கி உய்குதிர் ! நீவிர் உண்மைக் கருத்தறியாது இந்துசமயக் கடவுளைப் புராணக்கதைகொண்டு தூஷணப்பொதிமுடைய முயலாதீர் ! முயல்வீரேல், 'சிவனுந் தேவனு என்னும் நியாநாவுக்கு ஆப்பை' முதற்கண்ணே தலைகுனிந்து கண்டிறந்து பார்க்குதிர்! பார்த்தபின் சிறிது முயன்று பார்க்குதிர் !

---

## விக்கிரகாராதனை ஆவசியகம் வேண்டுமென்பது.

---

இந்திவ்வுலகத்திலுள்ள எவர்களும் எவைகளும் சத்தெனு அசத்தென்றுவது, மேலென்றுங் கீழென்றுவது, நன்மையென்றுவது தீமையென்றுவது, ஒளியென்றுவது இருளென்றுவது, அமிர்தமென்றுவது நஞ்சென்றுவது, புண்ணி

யமென்றாவது பாவமென்றாவது, நித்தியமென்றாவது அநித்தியமென்றாவது பகுக்கப்படும். மேலே சொல்லப்பட்ட எவரையேனும் எவற்றையேனும் அறியப்புகின் குறியாயினும் குறிகளாயினும். ஆவசியகம் வேண்டப்படும்; அந்தக் குறி சங்கமக்குறி தாபரக்குறியென இருவகைப்படும். பிதா, மாதா, தமையன், மாமன், தீக்ஷாகுரு, வித்தியாகுரு,போதககுரு, ஞானகுரு முதலாயினோரும்; எழுத்துக்கள்,சொற்கள், வசனங்கள், பாட்டுக்கள், புஸ்தகங்கள்,பொம்மைகள், ஆலயங்கள், விக்கிரகங்கள், விபூதி உருத்திராக்ஷம், இடபக்குறி சூலக்குறி முதலாயினவும் முன்சொல்லிய இருவகைக் குறிகளுள் அடங்குவனவாம். குழந்தையொன்று நிலவுலகத்திலே பிறந்து தன் தாய் தந்தையையே தனக்குத் தாபர்மாகக்கொண்டு பால்குடித்து வளரும். அந்தக் குழந்தையின் சிறிய வாய்வழியே தாய்தந்தையரால் ஓரோமுறையில் உண்ணப்படுகின்ற சோறு கறி முதலியவைகளைத் திணிக்கப் புகுந்தால், அது அக்குழந்தையின் உயிரைப் போக்கிவிடுமென்பதை விரித்துச்சொல்லலும் வேண்டுமோ? இந்தச் சிறுகுழந்தை விஷயத்திலே பாலூட்டுதல் நன்மையாயும், சோறூட்டுதல் தீமையாயும் முடிந்தவென்க. அக்குழந்தைக்குத் தாய் தந்தையர் சங்கமக் குறிகளாக எய்தினோராவர். இக்குழந்தை பால்மறந்து, சோறுண்டு, ஐந்துவயசாய் வளர்ந்து, நெடுங்கணக்குப் படிக்கப் புகுங்கால், உபாத்தியாயர் பிதாமுதலாயினோராற் கற்பலகை,மணல்,ஓலை, காகிதம், முதலியவை வாயிலாக அக்ஷரங்கள் எழுதிக் காட்டப் படும்போது அவ்வெழுத்துக்கள் தாபரக் குறிகள் எனப்படும். மாதா பிதாக்களாகிய சங்கமக்குறிகள் இல்லாது சிறுபாலன் தேக வளர்ச்சி அடையமாட்டான்; எழுத்துக்களாகிய தாபரக்குறிகள் இல்லாது அச்சிறுபாலன் கல்வியிலே வளர்ச்சி அடையவுமாட்டான். இது நோக்கியே ஔவைத் தாயார் 'அன்னையும் பிதாவு முன்னறி தெய்வம்' என்றார். நெடுங்கணக்குப் படிக்கும் பாலன், "அன்னையும் பிதாவும்" என்றமையால் தன்னாலே முன்னர்த்தெய்வங்களாகக் கொள்ளப்பட்ட பிதாமாதா என்னும் இருமுதுகுரவர் உணர்த்தப்பட்டாரென்றும், தன்னாலே முதற்கண்ணே படிக்கற்பாலது அகரமாமென்பது "அன்னையும் பிதாவும்" என்பதின் முதற்கண்ணே போந்த அகரத்தால் உணர்த்தப்பட்டதென்றுங் கொள்ளற் பாலனும். பிதாமாதாவினாலே சரீரமும், உபாத்தியாயராலே கல்வியும் வளர்ச்சி அடைந்தபின், அத்தாய் தந்தையர் வாயிலாகவும், அக்ர எழுத்துவாயிலாகவும், பின்னர் [illegible] அறியக்கிடந்தன. ஆலயமும், அத்

எழுந்தருளிய உருவத்திருமேனி எனப்படும் சகள வடிவமுமாமென்பது பெறப்பட, ஒளவையார் 'ஆலயந் தொழுவது சாலவு நன்று' என்றார். இந்த ஆலயம் மனக்கோயில் புறக்கோயில் என இருதிறப்படும். புறத்தே காணப்பட்ட அன்னை பிதாவானான், புறத்தே காணப்பட்ட அகரவெழுத்தினானான், மனக்கோயிலுள் எழுந்தருளியிருக்கும் திருவருளோடு கூடிய் இயற்கையுணர்வினராகிய பரமேசுவரர் அறியற்பாலராம் என்க. எனவே, ஒளவையார் முதலாயினோர் அருளிச்செய்த சூத்திரங்களும் பிறவும் எழுத்துக்குறி, வசனக்குறி, பொருட்குறி முதலியவைகளினாலே ஒவ்வோர் விசேஷப்பொருள் குறித்துச் செல்ல, இவற்றைப் போதிப்பவரும் கற்பிப்பவரும் உபதேசிப்பவரும் ஒவ்வோர் விசேஷப்பொருள் குறித்துச் சொல்லுவோராவர். எல்லாக்குறிகளும் கருத்துவகையினாலே தனித்தனி வெவ்வேறு பொருளுங்காட்டி, விரிந்த பொருள் கொண்டு ஓங்கி நிற்பனவாக, முழுமக்கள் தடிப்பொருள் சாதித்து ஒவ்வோர் பொருள் குறித்துத் தமது கட்டை அறிவுகாட்டி நிற்பர். ஒவ்வோரிடத்திலே கண்டிக்கப்படாது யாண்டும் வியாபித்து நிற்கும் சூரியசந்நிதானத்திலே பஞ்சிருந்தும் காந்தக்கண்ணாடியில்லாதொழியின் அதிலே நெருப்பு மூளுவதில்லையாம். அதுபோல, ஒருவன் யாண்டும் நீக்கமற நிறைந்த சின்மய பரப்பிரம சந்நிதானத்திலே இருந்தாலும், ஆசாரியனின்றி அவன் அருள்பெற்று உய்யமாட்டான். துரோணாசாரியரிடத்திலே அருச்சுனன் முதலாயினோர் வில்வித்தை பயின்றுவர, வேடன்ஒருவன் துரோணாசாரியர் வடிவமாகக் கல்லொன்றை நிருமித்து நிறுத்தி, அதனைத் துரோணாசாரியராக அன்பினோடு பாவித்துப் பூசித்து வழிபட்டு, உயிரோடியன்ற துரோணாசாரியரிடத்திலே இருந்து கற்றுவந்தவரினும், உயிரோடியலாத துரோணாசாரியக்கல் முன்னிருந்து வில்வித்தை கற்றுவந்த வேடன் வில்வித்தையிற் சிறந்தோனாயினனென்பது * பெறப்படுகின்றது.

ஒருவன் மற்றொருவனைத் தூஷித்துப் பத்திரிகையிலேனும், சுவரிலேனும், பிறவற்றிலேனும் எழுதியிருப்பானேல் அவன்

---

* இதனால் கல்லானது துரோணாசாரியருக்கு ஓர் குறியாய் அமைந்தமையும், அன்பே வடிவாயுள்ள கடவுள் அவ்வேடனால் உத்தேசித்து வழிபடப்பட்ட துரோணாசாரியவடிவத்தைத் தமது சத்தியால் அதிட்டித்து அநுக்கிரகித்தமையும் நன்கு வெளிப்படுகின்றன.

...யாது தண்டிக்கப்படத் தக்கவனாவான். மஹாராஜா ஒருவருடையபடத்தையாவது, அவருடைய பெயரைச் சூட்டி ஓர் தடியையாவது, கல்லையாவது நாட்டி, மலாபிஷேகஞ்செய்து கழுதைமேலேற்றி, நகர்வலம் வந்து, சுடலைகொண்டணைந்து, அப்படத்தையேனும், தடியையேனும், கல்லையேனும் தகித்தாயினும் புதைத்தாயினும் விட்டால், அது மஹாராஜாவுக்கும் அவரைச்சார்ந்த மற்றையோர்க்கும் எவ்வளவு கோபத்தையும் துன்பத்தையும் வருவிக்கும். இங்ஙனம் மஹாராஜாவுக்குச் செய்ததுபோலப் பாதிரி ஒருவருக்கும் செய்தால், அவர் நமது பேரைத்தரித்த படத்துக்கும் தடிக்கும் கல்லுக்கும் மலாபிஷேகஞ் செய்து, கழுதை வாகனமேற்றி, ஊர்க்கோலங்கொண்டு, சுடலைகொண் டணைந்தாரன்றி, நமக்கு யாதும் அவதூறுசெய்தாரில்லை; நமது வெள்ளைமூஞ்சை படத்துக்கும் தடிக்கும் கல்லுக்கும் இல்லை; நமக்குப்போலப் படத்துக்கும் தடிக்கும் கல்லுக்கும் உயிர் இல்லை; நமக்குப்போலக் கலலுக்கும் தடிக்கும் கைகால்முதலிய உறுப்புகள் இல்லை; நமது படத்துக்குக் கையிருந்தும் வேலைசெய்வதில்லை; கண்ணிருந்தும் பார்ப்பதில்லை; வாயிருந்தும் பேசுவதில்லை, தின்பதில்லை; காதிருந்துங் கேட்பதில்லை; கால் இருந்தும் நடப்பதில்லை; எனது பேர் வகித்த படத்துக்கு மலாபிஷேகஞ் செய்தாலென்னை? வேறெந்த அவதூறு செய்தாலென்னை? நமக்கொன்றுஞ் சார்வதில்லை என்று சும்மாவிருப்பர்தானோ? அவர் சிறிது முகத்தில் ஓர் விரலூன்றி யோசித்துச் சொல்வாராக. தீமை விஷயங்களிலே அப்படிச்செய்தல் நீதியன்றென்று உரைக்கும் பாதிரியார் நன்மை பாலிக்கும் விஷயத்திலே அதனை அன்பினோடு அங்கீகரியாது, தூஷிக்கத்துணிவதுயாது கருதியோ? இவற்றை யோசித்தால் பாதிரிமார் இனி விக்கிரகாராதனை செய்வது குற்றமென்று பேசத்துணியார். ஒருவரைத் தூஷிப்பது குற்றமாய்முடிதலின், ஒருவரைப் பூஷிப்பது என் குற்றமாகும்? பாவத்திலே விருத்தி அதிகமுளதாதலினால் அவருக்கு முந்தியது குற்றமாகத்தோற்றும்! புண்ணியத்திலே விருத்தியில்லாமையால் அவருக்குப் பிந்தியது குணமாகத் தோற்றுதுபோலும்! யேசுக்கிறிஸ்து ஏறக்குறைய ஆயிரத்தெண்ணூறு வருஷங்களுக்கு முன்னே மாண்டுபோனாலும், அவர் சிலுவையிலே பாடுபட்ட பரிதாப நிலையைக் காட்டிய சொரூபத்தைக் கண்ணுற்ற ரோமான் கத்தோலிக்கருடைய இதயங்களிரங்கி கண்ணீர்பெருகக் காண்கின்றோமே. இறந்துபோனவர் இந்தச் சிலைப்பொம்மைபோல இராதவிடத்தும், அது அவரது ஞாபகத்தை விளைத்து, அவர்க்கு உருக்கத்தை வி

ளைக்கின்றதன்றோ. ஆதலினால் விக்கிரகங்கள் தீமைக்குறிகளை விளைக்கும்போது தண்டனை விதித்தலும், நன்மைக்குறியை விளைக்கும்போது தூஷித்தலும் அறிவிலார் மதமாமென்க. இவ்வுண்மைகளை அரிச்சந்திர பொம்மையாட்டம், சிறுத்தொண்டர் நாடகப் பொம்மையாட்டம், இங்கிலீஷர் நாடகம்முதலியவைகளினும் ஒட்டி யோசிக்க.

இரக்கமென்பதின்றி ஆட்டையும் மாட்டையும் உண்ணும் வன்கண்ணப்பேயருக்கு இவ்வுண்மை புலப்படுதலும், இவ்வுண்மையைப் புலப்படுத்தலும் அரிதாமன்றோ. கோபுரங்களினும் பந்தர்களினும் முறையே அமைக்கப்பட்ட நிருவாண மூர்த்தங்களும் நிருவாணப் பொம்மைகளும் தீமைவிளைவிக்குமென்று அப்பேயர் சொல்ல அறிவார்! நிருவாணமின்றி நன்கு அலங்கரிக்கப்பட்ட விக்கிரகங்களால் ஏறக்குறையப் புலன்களெல்லாம் ஓரோவழியாய் இழுக்கப்பட்டு இன்பம்விளைந்துநிலையுறப்பெறும் என்று அங்கீகரித்திசைந்து இசைத்தற்கு அவர் தீயநாச் சிறிதும் உயராது! இன்னது தீமை பயக்குமென்று சொல்லி எழுந்த அவர் நாக்கு இன்னது நன்மைபயக்குமென்று சொல்லி எழுதற்குத் தடைப்படுவதென்னையோ?

பாலிலேயிருந்து தயிரும் வெண்ணெயும் நெய்யும் தோற்றமாயினும் இவற்றின் குணங்கள் வெவ்வேறாகும். ஆதலால், இது இது இன்ன இன்ன காலத்திலே உபயோகிக்கலாம், இன்ன இன்ன காலத்திலே உபயோகிக்கலாகாது என்று வைத்தியநூலார் விதிப்பரென்க. இனி இரசத்தைச் சும்மா உண்ணலாமெனினும் அதினின்று பிறந்த இரசபஸ்மம் நோயாளிகளுக்கன்றிப் பிறருக்கு நன்மை விளைக்காதாம். மூங்கிற்றண்டு கொண்டு வீடுகட்டலாமெனினும் அதினின்று கடைந்து பெறப்பட்ட அக்கினி வீட்டை எரித்துவிடும். இங்ஙனம் பரமேசுவரர் யாண்டும் நீக்கமற வியாபக முற்றிருப்பினும் அவரினின்று (மந்திர தியானாதிகளினாலே) தோற்றும்மூர்த்தங்கள் சமயம் வாய்ந்து சிவமூர்த்தங்களும் கோரமூர்த்தங்களுமாம். மூங்கிலை உடைந்த மூங்கிலென்றும் கிழிந்த மூங்கிலென்றும் தூஷியாது, நெருப்பொன்றே பெறல்வேண்டுமென்னும் கருத்துக்கொண்டு கடைந்தால் உலகமனைத்தையும் பொடிப்படுத்திவிடும் நெருப்புப் பிறக்கும். இதுபோல, ஒருவன் விக்கிரகங்களை ஒவ்வோர் குறிப்புக்கொண்டு அவ்வவர் திருமேனியாகப் பாவித்துத் தியானித்து அவ்வவர் இலக்ஷணத்தையும் குணத்

தையும் இவையாமென்று சாஸ்திரவாயிலாக அறிந்து அன்பு கொண்டு வழிபடுவோனாயின் அவன் வேண்டிய வேண்டியா ங்குபெற்றுச் சித்தி அடைவான்.

---

## விக்கிரகங்களினாலே சித்தியுண்டாமென்பது.

---

ஒருவன் தன்னினும் பார்க்க எவற்றானும் சிறந்த பெரியோனுடைய பாதகுறடு, புஸ்தகம், கண்ணாடி, மோதிரம், பிரம்பு, தண்டு, பாத்திரம், வஸ்திரம், குடை, பொற்கடிகாரம், தங்கச் சங்கிலி, வாகனம், கடிதம், கையெழுத்து முதலியவைகளைக் காணவும் பரிசிக்கவும் எப்போதும் ஆசைமீதூரப்பெறுவான். அவற்றில் ஒன்றையேனும் தான் ஞாபகசின்னமாகத் தரிக்கப் பேரவாக்கொள்வான். யுத்தத்திறமையின் பொருட்டாவது, வித்தியாதேர்ச்சியின் பொருட்டாவது, உத்தியோகத்திறமையின்பொருட்டாவது, வேறெவ்வகைப்பட்ட சாமர்த்தியத்தின்பொருட்டாவது கொடுக்கப்பட்ட சின்னங்கள் அவ்வவற்றிலே அவனது சிறப்பைக்காட்டி நிற்குமன்றோ. தக்கவர்களால் அச்சின்னங்கள் கொடுக்கப்படாதவிடத்து, ஒருவன் அச்சின்னங்களைத் தானேசேர்த்துக்கொண்டால் அவன் தப்பாது தண்டிக்கப்படுவா னென்பதற்கு ஐயமுமுளதோ? அப்படி இரகசியத்திலே செய்து பூண்டுகொண்டாலும் இவை முந்தியனபோலப் பெருமைபாலிக்குந்தானோ? நகைப்பையும் இழிவையும் அவனுக்குக்கொடுத்துத் தாழ்த்திவிடுமன்றோ? இங்ஙனம் சமயக்குறிகளாகிய விபூதி உருத்திராக்ஷம் முதலியனவும் ஒவ்வோர் குறிப்புக் குறிகளையே உடையனவாம். இவைகளைத் தரிப்போர்க்கும் இவைகளைத் தரிக்கக் காண்போர்க்கும் தத்தம் அளவிலே அதிக ஆனந்தத்தைக் கொடுக்கும். இவைகளிலே பற்றில்லாதவனுக்கு இச்சின்னமெல்லாம் நஞ்சாய் முடியும். இது சமணருடைய "கண்டுமுட்டுக் கேட்டுமுட்டு" எனப்படலாம். எங்கும் பீ. ஏ., பீ. எல்., எம். ஏ. முதலிய எழுத்துக்கள்காணப்படினும், அவையெல்லாம் அவ்வப்பண்டிதர்களால் கொடுக்கப்பட்ட பட்டங்கள்போலஇனிமையும் பெருமையும் பிறப்பியாவாம். கல்லுகளெல்லாம் எங்குங் காணப்படினும் அவையெல்லாம் சாஸ்திரவிதிப்படி தெரிந்தெடுத்து நிருமிக்கப்பட்ட விக்கிரகவடிவங்கள்போல நன்மைபிறப்பியாவாம். அந்தப் போலிப் பட்டங்களாலும், அந்தப் போலிப்பட்டங்கள் சூட்டினவர்களாலும் எங்ஙனம் பிரயோ

ஜனம் விளையாதோ, அங்ஙனம் விதிப்படி செய்து மந்திரசமஸ்
காரம் இல்லாத விக்கிரகங்களாலும் யாதும் பயன்படுவதின்
றும். இவ்வுண்மைகள் கூர்ந்த விவேகிகளுக்கே புலப்படும்.
பூசினிப்பிஞ்சு முதலியவைகள் கொடிகளிலே வளரும்போது
ஒருவன் தன்னுடைய கையைக்காட்டினாலும் தொட்டாலும்
அவை அழுகிப் பழுதாய்விடும். இதனால் காட்டியவிரலுக்கும்
தொடப்பட்ட காய்களுக்கும் உளதாகிய பௌதிகசக்தி பெரி
தாமென்பது நன்கு ஸ்தாபிக்கப்படும். தொட்டாற்சுருங்கி முத
லிய பூண்டுகளிலே கையைவைத்தலினால் அவை உடனே வாடித்
தாழ்ந்துவிடும். ஒருவருக்கு உடைமையாகிய உயிருள்ள பொ
ருளையாவது, உயிரில்லாப்பொருளையாவது நன்றென்று ஒரு
வர் கண்ணால் [illegible]கித்தாலும், வாயாற் சொன்னாலும், அந்தப்
பொருள் உடனே கெடுபிறந்தழியக் காண்கின்றோம்: இது
பொதுவாகத் திருஷ்டிதோஷமெனப்படும். புருஷரைச் சௌ
ந்தரிய யௌவன மகடூக்கள் நோக்குங்காலேனும் பரிசிக்குங்
காலேனும் அவர் மாதர்வயப்பட்டு மனசுவேறுபட்டு ஒழிகின்
றார். பாம்பைசகொல்லும் மயிலானது பச்சோந்தி எதிர்ப்ப
டின், அது தன் வசமெல்லாம் ஒழிந்து அவ்வோந்திவயப்பட்
டு ஒழிகின்றதே. பூனைக்கு எதிர்ப்பட்டொழுகும் எலி அப்பூ
னைவயப்பட்டு மாய்கின்றதே. வசமாக்குதலும் சாமர்த்தியமும்
எல்லாரிடத்தும் எக்காலத்தும் நிகழ்வனவன்று. படிக்கமுய
ல்வோரெல்லாம் கவிஞராவதில்லை. கல்வி செல்வம் உத்தியோ
கம் முதலியவற்றில் ஒவ்வொருவர் சிறந்தாராயினும் அவ்வ
வர் அதிகாரம் எல்லோரினும் பலிப்பதுமில்லை. படித்தவரெ
ல்லாம் சபையார் புகழுமாறு பிரசங்க பண்டிதராவதும்
இல்லை. நிலங்களெல்லாம் விதைப்புக்கு உதவுவனவுமில்லை.
கற்றவரெல்லாம் ஞானிகளாவதும் இல்லை. ஆலயங்களுள்ளே
ஸ்தாபிக்கப்படும் சிலாவிக்கிரகங்களின் பொருட்டு எடுக்கப்ப
டுங் கற்கள் இன்ன இன்ன இலக்கண முடையனவாயிருக்க
வேண்டுமென்று சிற்பசாஸ்திரங்கள் செப்புகின்றன. அப்ப
டிப்பட்ட சிலைகளிலே பௌதிகசத்தி மிகுதியும் உளதாய்.
இப்படித் தெரிந்து அமைக்கப்பட்ட சிலைகள்கொண்டு இயற்
றப்பட்ட விக்கிரகங்கள் மந்திர சக்தியும் ஞானிகளுடைய
ஞானதிருஷ்டியும் ஏறுதற்கியன்ற வாய்ந்த இடங்களாகும்.
பச்சைக்கல்லை எப்போதும் பார்த்துவந்தால் சாலேசரம் என்
னும் கண்ணோய் நீங்குமென்று வைத்திய சாஸ்திரங்களிலே
சொல்லப்படுகின்றன. மேலேசொல்லப்பட்டவாறு, சித்துப்
பொருள்களுடைய சத்தி சடப்பொருள்களிலும், சடப்பொ
ருள்களுடைய சத்தி சித்துப்பொருள்களிலும் செல்லுதற்

கியன்ற ஆகருஷ்ணவன்மைகள் உளவாமென்பது பெறப்பட்டது. இங்ஙனம் பொன், வெள்ளி, செம்பு முதலியலோகங்கள்கொண்டு நிருமிக்கப்பட்ட விக்கிரகங்களிலே அவ்வவ்லோகங்களுக் கியைந்த ஏற்றத்தின்படி சத்திகளும் வேறுபட்டோங்கும். ஒருவன்வாயினுல் ஒரு மரத்துக்கு எதிரேசெப்புகின்ற எழுத்துச் சொற்களின் நாதம் மற்றலோகங்களிற் போலத் தொனிப்பதில்லை. ஒவ்வோரெழுத்திலேயுள்ள நாத பலசத்தி மற்ருெரெழுத்திலே இல்லாதொழிதலுமாம். கருட மந்திரத்தை நாடோறும் பயின்று வந்தவன் அப்பயிற்சி விசேடத்தால்விஷவேகத்தைத் தூரத்தேஇருந்துகருடமந்திரத்தியானமாத்திரத்தினுலே ஒழிப்பதைக் கண்ணூரக் கண்டிருக்கின்ருேம். மந்திரசித்தியடைந்தவராலும் மெய்ஞ்ஞானிகளாலும் முறையே மந்திரங்களினுலும் அருள்வாக்கினுலும் ஆலயங்களிலே எழுந்தருளியிருக்கின்ற விக்கிரகங்களிலே சாந்நித்தியத்துவ சத்தியுண்மை வைரத்தம்பம்போலத் தாபிக்கப்பட்டமைஅருட்கண்ணுடையார்க்கே புலப்படும். ஸ்தூலார்த்தங் கொண்டு மயங்கும் அருட்கண்ணில்லா மிலேச்சருக்குஅறிவுறுத்தல் எளிதாய் முடிவதொன்றன்று. இன்ன இன்ன தேவதைகளுக்கு இன்னஇன்ன பீஜாக்ஷரத்தோடு கூடிய மந்திரங்கள் இவை இவையாமென்று உரைக்கப்படுகின்றது. இடைவிடாத அபிஷேகநைவேத்திய பூஜையும், இடைவிடாத சனங்களுடைய வழிபாடும் எந்தெந்த ஆலயங்களிலே நடைபெறுகின்றனவோ, அவ்வவ் வாலயங்களிலே அடியார்கள் நாக்கறுக்க முளைத்தலும்,கழுத்துவெட்டப் பொருந்துதலும், காவடித்தவிடு சர்க்கரை யாதலும், செத்த மற்சங்கள் உயிர்பெற்றுக்குதித்தலும்,பேயோட்டமும் மற்றையசித்திகளும் நடைபெறப் பிரத்தியக்ஷமாகக்காண்கின்ருேம்; இவ்வுண்மைகளையெல்லாம் கிறிஸ்தவர் சாவதானமாகிய மனசோடு பழனி, திருச்செந்தூர், கதிர்காமம், திருப்பதி, மதுரை முதலிய ஸ்தலங்களிலே அவ்வக்காலங்களிலே போய்ப்புறத்து நின்று கேட்டறிவாராக. இவற்ருல் மந்திரசாந்நித்தியத்துவத்தை இல்லையென்றுமறுத்தல் கிறிஸ்தவராலும் இயலாதாம்; "சிலுவையிலே பாவிகளின் பொருட்டு யேசுகிறிஸ்துநாதர் மாண்டார், பாடுபட்டார்; அவரை அஞ்ஞானிகளே! விசுவசியுங்கள்" என்னும் மந்திரத்தை இடைவிடாதுசொல்லிப்பிரசங்கித்துத்தமதுகண்வாட, முகஞ்செத்தாருக்குப் போலச் சோர, தலை மண்ணையும் விண்ணையும் நோக்கித் தாளமிடக் கசிந்து நொந்துநிற்கும் அக்கிறிஸ்தவரிலே கிறிஸ்துவின் சொரூப செத்தநிலைபலித்துநிற்கப் பிரத்தியக்ஷத்திலே காண்கின்றேமாதலினுலென்க.

மஹாபாரதத்திலே சொல்லப்பட்டவாறு அக்கினியிலே தோற்றிய பாண்டவர் மனைவியாராகிய திரௌபதியாருடைய உற்சவகாலங்களிலே, இருபத்துநாலு அடி நீளமும், எட்டடி அகலமும், ஓரடி ஆழமும் உள்ள குழியிலே நிறைத்தெரிக்கப்பட்ட அக்கினியிலே சாமானிய அறிவுடைய இந்துக்கள் பன்னூறுபேர் நெருப்புக்கண்டங்கள் பொடிபட நடந்து கால்களிலே யாதொருவேதனையுமின்றி நீங்கிநிற்கின்றார்கள் திரௌபதி யம்மையுடைய வஸ்திரங்களில் நெருப்பை வாரிக்கட்டியவிட்டும் அந்த வஸ்திரம் எரிந்திலதே. இந்தச் சிறு தேவதையுடைய சக்தி உங்கள் கிறிஸ்துவுக்காயினும் உங்கள் யெகோவாவுக்காயினும் உளதா? சமீபத்தே நிற்கவொட்டாது நமது தேகத்தையெல்லாம் அவ்வக்கினிச்சுவாலை மிகுவேகத்தோடுவெதும்பச்செய்வதேயாகவும், அத்திரௌபதியம்மையை உபாசிப்பவர்கள் அக்கினியிலேநடந்து செல்கின்றார்கள் தண்ணீர்மேல் ஓர் கிறீஸ்து யாம் காணப் பெறாத ஓர் காலத்திலே சென்றானென்கிறீர்; நமது இலங்கை இந்தியாவிலுள்ள பற்பலர் வருஷந்தோறும் யாமெல்லாங்காண அக்கினிப் பிரவேசஞ்செய்து யாதும் இடையூறின்றி நீங்கி நிற்கின்றார்கள். தண்ணீரில் நடந்தானெனப்படும் உங்கள் கிறிஸ்துவோ அக்கினியில் நடந்த நமது சாமானிய இந்துக்களோ? யார் சிறந்தவர்? நம்மவர்அக்கினிவாதை தடுக்கும்பொருட்டுப் பிரவேசத்துக்கு முன்னாயினும் பின்னாயினும் தங்கால்களுக்கு யாதுமௌஷதம் பிரயோகிப்பதில்லை. இது உண்மையன்றாமெனின் புதுச்சேரியைச் சார்ந்த மூன்னூர் என்னுங் கிராமத்திலும் பாவநாசத்தைச் சார்ந்த சுரிமுத்தையன் கோயிலினும், இலங்கையைச் சார்ந்த மட்டக்களப்பினும் மற்றைய கிராமங்களினும் நகரங்களினும் போய்ப் போய்ப் பார்த்து உண்மை தெளியுங்கள்! இப்படி அக்கினியிலே நடத்தல் எளிதென்பீரேல் நீங்கள் அவ்வளவு விஸ்தீரண மில்லாத ஓர் முழு நீள அகலங்கொண்ட குழியிலே நடந்து உங்கள் சாமர்த்தியத்தைக் காட்டுங்கள்? இவ்விரண்டுஞ் செய்ய உங்களுக்கு அவசியக மில்லையென்பீரேல், நமது மிகமேலாகிய இந்துசமயத்தைத் தூஷித்தல் ஒழிந்து வாயைப் பந்தனஞ்செய்து கொள்ளுங்கள்! ஆதலினால், நமது பரமேசுவரர் நமது ஆலயங்களிலுள்ள விக்கிரக வடிவமாயிருந்த தேவர்களை அதிட்டித்துக் காட்டத்திலே நின்று பிறப்பிக்கப்படும் அக்கினிபோல அவ்வத்தேவ சாந்நித்தியத்துவஞ் செய்து விளங்குவாரென்பதை மறுக்காது செவிவாய்மடுத்து வாயடங்கி நில்லுங்கள்!

---

# வழிபடுதற்கு ஆலயங்கள் வேண்டுமென்பது.

---

நமக்குள்ள ஐம்புலன்களுள்ளே காதானது நல்ல கீதங்களைக் கேட்டல் வேண்டுமென்னும் ஆசையினும், மெய்யானது பரிசத்திற்கு இயைந்த நல்ல தானங்கள் வேண்டுமென்னும் ஆசையினும், கண்ணானது நல்ல சௌந்தரியமுள்ளபொருள்களைக் காண்டல் வேண்டுமென்னும் ஆசையினும், நாக்கானது இனிய உணவுகளை உண்ணவேண்டுமென்னுமாசையினும், மூக்கானது நறியநாற்றத்தை மணக்கவேண்டுமென்னும் ஆசையினும் செல்லும்; இந்தஆசையனைத்தும் தனித்தனி ஒவ்வோர் விரும்பிய பொருளிலே ஏகாந்தஸ்தானத்திலே அதிகம்செல்லும்; அங்ஙனமின்றிப் பற்பலர்குழுமி ஒரே பொருளின் கண்ணே கருத்துச் செலுத்து மிடங்களினும் அப்புலன்கள்தனித்தனிசெல்வனவாம். இதுநோக்கியே ஏகாந்தஸ்தானங்களும், ஆலயமும், சபையும் தியானம் வழிபாடு மந்திராலோசனைகளின் பொருட்டுப் பெரியோரால் முன்னரே அமைக்கப்பட்டுள்ளன. சொல்லுக்கடங்காத பசு வலாற்காரமாக ஒருநாட் பிடித்துக் கயிறுகொண்டு பிணிக்கப்பட்டு, பின்னொருகால் புல்லுக்காட்டிப்பிணிக்கப்பட்டு, பின்னொருகால்புல்லுக்கண்டு அது தானாக வந்துநின்று போதற்குப் பழக்கப்பட்டாற்போலப் புலன்களும் நல்விஷயங்களிலே பழக்கப்படும். ஒருவனைப் பற்பலர் கூடிய இடத்திலே மற்றொருவன் தன்சொல்லுக் கிசையச்செய்தல் அரிதாம்; தனித்த இடத்திலே அவனை இசையச்செய்தல் எளிதாம்; தனியே இருக்கும் இடத்திலே ஒருவனுக்குத் தன்னால் விரும்பப் பட்டவர் இறந்தவிடத்தே அழுகை மிகுதியும் உண்டாவதினும், பன்னூறு பேர்கூடி அழுமிடத்திலே அவனுக்கு அழுகை சொலித்தோங்கும்; நல்ல தக்கோர்கள் கலந்து ஒவ்வோர் விஷயத்தைக் குறித்துச் செய்யும் ஆலோசனையும் மிகுதியும் பலிப்பதாகும்; இவற்றால் ஏகாந்தஸ்தானம் முதலியவற்றின் உண்மை நன்கு புலப்படுமென்க. பற்பலர் ஒருங்குகூடிப் புறவிஷயங்களினின்றும் மனதைத் திருப்பி ஆலயத்திலே, காதுக்கு இனிய வாத்திய கோஷமத்தியிலே, நல்ல ஆடையாபரண முதலியவைகளாலே அலங்கரிக்கப்பட்ட விக்கிரகங்களிலே, கருத்து ஒருங்கு செலுத்தப்படு கின்றமையால் சித்தி பெரிதும்உண்டாகும். இவ்வுண்மை நோக்காது, கோயிலிலேசென்று அஞ்ஞானிகள் விக்கிரகத்தை வணங்குகின்றாரென்று கிறிஸ்தவர் தூஷிப்பது நிரசனஞ் செய்யப்பட்டது. ஒருவனுக்கு எப்பொழு

தும் பெரும் பான்மையும் ஒரோ குறிப்பிலே மனசு இறங்கி நிற்றல் வேண்டும். பலவற்றிலும் செல்லவிடுதலினாலேஅவன் அவை யொன்றினும் தேர்ச்சி அடையமாட்டான்.

"ஒருவன் மற்றையோருடைய கால இயற்கைகளை யெல்லாம் அறியவேண்டுமானால், அவன் மனசையும் நோக்கத்தையு முதற்கண்ணே நிலையுறச்செய்து, வேறெண்ணமாவது வேறு விஷயமாவது முற்றுந் தாக்காது தவிர்த்து, ஒரோகுறிப்பிலே நிறுத்தல்வேண்டும்; இரண்டாவது அந்தப்பொருளை உறுத்தி நினைத்தல் வேண்டும்; மூன்றாவது அறியவேண்டிய விஷயத்தை ஓர்மையோடும் உறுதியோடும் நன்கு திருத்தமாக ஆராய்ந்து முடித்தல்வேண்டும்." என்று அமெரிக்கன் பண்டிதருஞ் சாற்றுகின்றார்.

"If one wants to be able to peruse the life-scroll o' others, the *first* thing learned must be the *steady* fixing o mind and purpose, aim and intent upon a single point wholly void of other thought or object. The *secon* requirement is, *Think the thing* closely; and *third*, *wil steadily, firmly*, to know the correct solution of the problem in hand."

ஒருவன் பிறவிஷயங்களைக் காண்டல் தவிர்த்துப் பலர் ஒருங்குசேர்ந்து ஒரோ கருத்திலே மனசு பதிக்கும் ஆலயத்தினுள்ளே புகுந்து, பிரம விஷ்ணு உருத்திரனென்னும் மூவரின் குறிகளாயுள்ள அகார உகார மகாரங்களால் அமைந்த திருமேனிகளிலே புறக்கண்களை நிறுத்தி, குறிகளைத் தாண்டிவாக்குமனாதீதமாய் விளங்கும் அகண்டாகார நித்தவியாபகசச்சிதானந்த பரமேசுவரரிலே அகத்து அறிவுக்கண்ணைச்சேர்த்தி, அந்தநிலை வைரித்துநின்று வளருமாறு நீர் பாய்ச்சினாற்போல், அருட்பாக்களை இடையீடின்றி காவினாலே பாடி, அன்பின் கண்ணீர் பெருக்கிப் பேரானந்தத்து அமிழ்ந்தி நிற்பாராக.

---

## தீமைநன்மைகளிலே ஒவ்வொருவன் சிறந்திருப்பான்; கிறிஸ்தவரோ சனங்களைக் கடுவேதனை செய்து பொசுக்கிச் சேர்த்தலிலே தேர்ந்தவராமென்பது.

---

ஒருவன் களவெடுத்தலிலே எம். ஏ. பட்டம் பெற்றிருப்பானாயின், இவனை இயல்பாகவே எம். ஏ. பட்டம் பெற்று

ெனருவன் களவிலே வெல்லுதல் அரிதாம். சூதிலே எம. ஏ. பாசு பண்ணினுெனருவனை மற்ருேர் சாமானிய எம். ஏ. ஜயித்தல் அரிதாம். இங்ஙனம், பொய் காமம் முதலியவைகளிலே தேர்ந்தாெனருவனை மற்ெருருவன் ஜயித்தல் கூடாதென்பதும் சொல்லாதே விளங்கக் கிடக்கின்றது. களவு, சூது, காமம் முதலியவைகளிலே சித்திபெற்ருெனருவன் எங்கெங்கே சென்ருலும் அங்கங்கெல்லாம் அவன் களவு செய்யவேண்டிய ஏதுக்களும், சூதுசெய்யவேண்டிய ஏதுக்களும், காமுறுதற்குவேண்டிய ஏதுக்களும் ஒருவர் கூட்டாது தாமே வந்தடையும். பணத்திலே கதித்தாெனருவனைப் பணந்தேடித் தேடிவந்தடையும். நல்லுணவு உண்டாெனருவனையும், நல்ல கல்விகற்ருெனருவனையும், நல்லுணவும் நல்லபுஸ்தகங்களும் சென்றசென்ற விடமெல்லாம் வந்து வந்தடையும். சுருங்கச் சொல்லின், எவனெவன் புலன்களைப் பலவழியாய்ச் செலுத்தாது ஒரே புலனுய் ஒரே படித்தாய் ஒரேநோக்கத்தோடு கருத்திறக்கி வருவானே, அவனவன் அந்தந்த நோக்கத்திலே பெரிதும் மேன்மையுறுவான். யேசுகிறிஸ்து இரத்தஞ் சொரியச்சொரியக் கொலைசெய்யப்பட்டமையானும், அவனைநோக்கிக் காலை மாலை முதலிய காலங்களெப்போதும் கிறிஸ்தவர் ஜபம் பண்ணும்போதெல்லாம்அவர் கருத்து யேசுவின் இரத்தஞ் சொரிதலிலும், அவர் பாடுபட்டமையிலும் கருத்திறங்குதல் மாத்திரத்தில் அமையாது, அவர் இரத்தமும் சரீரமுமாக திராட்சரசமும் கோதுமை அப்பமும் பாவித்துண்ணப்பட்டமையானும், அக்கிறிஸ்தவர் முகமெல்லாம் தூங்கல்முகத்தையேகாட்டி நின்றன. தீமையிலே தேர்ந்து, இவர் கொலையினுலும், மனசு திடுக்கிடத்தக்க கொடுந்தண்டங்களினுலும் பற்பல இலக்ஷம்பேரைக் கிறிஸ்தவராக்கினுர். பின்வரும் உதாரணங்கள் அவற்றைத் தெளிவாகப் புலப்படுத்தும்.

1. ஐந்தாவது நூற்ருண்டில் ஓர் சிறந்த கலைஞானவல்லளாகிய கிபேஷியா (Hypatia) என்பாள் தன் வண்டியிலிவர்ந்து தான் பிரசங்கஞ் செய்யும் மண்டபம் நோக்கிச் சென்றபோது, அவளைப்பிடித்து இழுத்துஅலெக்சாண்டிரியா என்னும்பெரிய கோவிலுள்ளே கொண்டுபோய் நிருவாணமாக்கி, அவள் தோலை உரித்து, அவளை அடித்து, அவள் சரீரத்தை இப்பியோடுகளினுலே சின்னபின்னங்களாக வெட்டிப் பின்னர் எரித்து விட்டார்கள். அலெக்சாண்டிரியாவிலுள்ள வாலிபன் ஒருவனைப் பழைய தெய்வங்களை வழிபடும்படி செய்தமையே அவள் செய்த குற்றமாம். கிறிஸ்தவபிக்ஷைப்பாரி

சைறில் (Cyril) என்பானுடைய சேனையாகிய துறவிகள பைபிலிலே யுள்ளயாத்திராகமம் 22-ம் அதிகாரம் 20-ம் வசனத்திலே,

"கருத்தர் ஒருவருக்கே ஒழிய வேறே தேவர்களுக்குப பலியிடுகிறவன் சங்கரிக்கப்படக் கடவன்" என்று சொல்லப்பட்ட விதிகொண்டு அவளை மேலே சொல்லியவாறு கொலைசெய்து விட்டார்கள்.

"In the fifth century, Hypatia, the beautiful philosopher, was seized and pulled from her chariot as she drove towards her lecture-room, was dragged into the great church of Alexandria, stripped naked, struck down, and her body cut to pieces with oyster-shells, and then burned. Her crime was that she was drawing the youth of Alexandria back to the old Pagan Gods, and the monks, the army of the Christian bishop Cyril, murdered her in obedience to God's command in Ex. XXII. 20."

2. தியடோரு என்னும் சக்ரவர்த்தினியின் பரிபாலன காலத்திலே (Empress Theodora) ஆர்மினியாவில் நூறுயிரம் பேர் பிடிபட்டு, அவர் பொருள் பறிபட்டு, அவர்கள் சரீரங்கள் அக்கினியிலே பொடிபடுத்தப் பட்டன.

"In Armenia, by order of the Empress Theodora 100,000 people belonging to the Paulician heresy were seized, their property confiscated, and they themselves tortured to death."

பாதிரிகாள்! ஒரு சிறுபாத்திரத்தில் அகப்பட்ட கொசுக்களைப் பொசுக்கினுற்போல, அவ்வளவு லக்ஷம்பேரை நெருப்பிலிட்டுப் பொசுக்கிவிட்ட கதையைக்கேட்கவேனும் வாசிக்கவேனும் நம் மனசு மரம்போலவேனும் கல்லுப்போலவேனும் சிறிதும் இரக்கமின்றிக் கிடக்கும்போலும்!

3. 1099ல் ஜெருசலேம் நகரம் பிடிபட்டபோது கிறிஸ்துவின் சைனியங்கள் முழங்கால்களினின்று எழுந்து நகரத்துத்தெருக்கடோறும் திரிந்து, ஆண்பாலார் பெண்பாலார் பிள்ளைகளாயினுேரை யெல்லாம் அற்பமேனும் இரக்கமின்றிக் கொலைசெய்து விட்டார்கள். இலான்குவிடாக்கு (Langue-

doc) என்னுஞ் செழிப்பும் சீர்த்திருத்தமும் உள்ளதுமாகிய தேசம் பாழ்ங் கிறிஸ்தவர்களாலே பாழாக்கப்பட் டொழிந்தது. அத்தேசத்து நகரங்கள் சுடப்பட்டொழிந்தன. குடிசனங்கள் நெருப்பாலும் வாளாலும் வாருண்டொழிந்தார்கள்; பேசியார்ஸ் என்னும் நகரத்தை எதிர்ந்துஉடைத்து அழிக்கப் புகுந்தபோது, மனுஷனென உடல் எடுத்தான் ஒருவனையும் உய்யவொட்டாது அறுபதினாயிரம்பேரை அழித்துவிட்டார்கள்; கடவுள் தம்சொந்தம் எதுவென அறிவார் எவரையும் தவறவிடாதீர்! எல்லோரையுங் கொல்லுங்கள்! என்பதே அந்தக் கிறிஸ்துசேனைக்குக் கொடுக்கப்பட்ட சட்டமாம். பைபிலின் உபாகமம் பதின் மூன்றாம் அதிகாரத்திலே விதிக்கப்பட்ட யேகோவாவின் துஷ்டகட்டளையைக் கைக்கொண்டு தங்காரியத்தை மேலே கூறியவாறு இரக்கமின்றி முடித்தார்.”

“In 1099 Jerusalem was taken. The soldiers of Christ rose from their knees and went through the streets, slaying pitilessly men, women, and children. Languedoc, a country, for that age, flourishing and civilized, was laid waste by these desolators; her cities burned; her inhabitants swept away by fire and the sword; in the storming of Bezieres and the accompanying massacre, 60,000 persons perished, not one human being escaping. ‘Kill them all!’ was the order given to the army “Kill them all! God will know his own.” These butchers carried out God's commands as recorded in Deut. XIII 12—16.”

4. 1480௵ பெர்டினண்டு அரசனும் அவன் மனைவியாரும் ஆண்டலூசியா என்னும் மாகாணத்தில் மூவாயிரம்பேர் நெருப்பிலிட்டுப் பொசுக்கப்பட்டார்கள்; பதினேழாயிரம்பேர் வேறு வகையாகத் தண்டிக்கப்பட்டார்கள்; இருநூற்றுமுப்பத்தாறு வருஷங்களுக் கிடையிலே ஸ்பானியா தேசத்தில் உயிரோடு நெருப்பிலிட்டு எரிக்கப்பட்டோர் தொகை முப்பத்தோராயிரத்துத்தொளாயிரத்து பன்னிரண்டுபேர். சியுடட்றியல் என்னும் இடத்திலே தொளாயிரத்தைம்பதுபேர் உயிரோடு தகிக்கப்பட்டார்கள். ஸ்பானியாவிலே, இறுதியாக நூற்றேழு வருஷங்களுக்கு முன்னையதாகிய 1781௵ நவம்பர்௴ 7உ பேயோடிணக்க முடையவளென்று கொண்டு ஏழைப்பெண்ணொருத்தி நெருப்பிலிட் டெரிக்கப்பட்டாள்.

1502௵ இங்கு விளக்காத சமாதானம் மேற்கொண்ட முப்பதுலக்ஷம் துலுக்கர் கிறிஸ்தவரால் அவர் சனனதேசத்தி னின்று துரத்தப்பட்டார்.

"In Spain the Holy Office worked hard; established b Ferdinand and Iabella, A. D. 1480, during the follow ing year it burned nearly 3000 persons in the province o Andalusia alone, and otherwise punished another 17,000 31,912 persons were burned alive by it in Spain during th 236 years of its fullest power; in addition to these i heavily punished 291,450 human beings. In One year 95 persons were burned alive in Ciudad Real. The las woman burned in Spain was an unfortunate creatur accused of making a contract with the devil; she suffere as Seville, on November 7, 1781, only one hundred an seven years ago. In 1502, the Moors were the victims they too, were driven out of the land of their birth, an no less than 3,000,000 harmless, peaceful citizens wer thus exiled by Christianity."

5. நெதர்லான்ஸ்(Netherlands) தேசத்திலே ஆல்வா என்பான் தனது பரிபாலனம் செலுத்தப்பட்ட நாலைந்து வருஷங்களுக்குள்ளே பதினெண்ணாயிரம் பேரைக் கொலைசெய்து விட்டேனென்று புளுகினான். ஒருவருஷத்திலே எண்ணாயிரம்பேர் தகிக்கப்பட்டும் வதைக்கப்பட்டும் போயினார். 1566௵ ஐம்பதினாயிரம்பேர் கொலை செய்யப்பட்டார்.

"In the Netherlands, Alva boasted that, in the five o six years of his administration, he had put to death in cold blood more than 18,000......we know, from other sources, that in one year more than 8000 were either executed or burned. The Prince of Orange estimated that, up to the year 1566, 50,000 persons had been put to death in obedience to the edicts."

6. பாரிஸ் பட்டணத்திலே 1572௵ ஆகஸ்டு௴ 24௳ ஹியூக்நாட் என்னும் ஓர் சாரரில் ஆயிரத்துநானூறுபேரை ஓடவிட்டு, அவர்மீது அரசன் தனது அரண்மனைச் சன்னலிலிருந்துபாணப் பிரயோகஞ் செய்து, அவர்களைப் பறவைகள் போலக் கொன்றான். தம்மதத்துக்குச் சேரவிசையாதோரை நன்றாகக் கட்டி, வேதனை யந்திரத்துக்குள்ளே செலுத்தி, அவ ர் வாயினுள்ளே விரிந்தவாயுள்ள குழல்களை மாட்டி, அக்குழல்

வழியாக அவர் தொண்டையிலே இறங்கும்படி திராக்ஷாரசத்தைப் புகைகிளம்பப் புகட்டி அவர்அறிவை மயக்கிக் கத்தோலிக் கிறிஸ்தவராய்வருவோமென்று சொல்லும்வண்ணம்செலுத்தி வருத்தினார்கள். அம்மட்டோ? அவர்களை முற்றும் நிருவாணிகளாக்கி ஆயிரவகைப்பட அவமானஞ்செய்து தலையிருந்து கால்பொறுக்கக் குண்டூசிகளினாலே குற்றிப் பேனாக் கத்திகளினாலேவெட்டி, ஒழுகக்காய்ச்சிய குறடுகளினாலே அவர் மூக்குகளைக் கிழித்து விட்டார்கள்.

"At Paris, Aug. 24, 1572, the Huguenots were suddenly attacked, and over 1400 persons were slain, the king, from his palace window, shooting at the flying fugitives. They (soldiers) bound them as criminals are when they be put to the rack; and in that posture, putting a funnel into their mouths, they poured wine down their throats till its fumes had deprived them of their reason and they had in that condition made them consent to become Catholics. Some they stripped stark naked, and, after they had offered them a thousand indignities they struck them with pins from head to foot; they cut them with penknives, tore them by the noses with red-hot pincers."

7. செக்கஸ் அஸ்குலேனஸ் என்னும் வைத்தியர் ஒருவர் புளோறென்ஸிலே 1337௵ கிறிஸ்தவராலே தகிக்கப்பட்டொழிந்தார். 1415௵ ஜான் ஹஸ் என்பவரும் 1416௵ அவர் சினேகிதராகிய ஜிரோம் என்பாரும் சுட்டொழிக்கப்பட்டார்ர். சிறிது சீர்திருத்தஞ் செய்யமுயன்ற ஸாவனரோலா என்னப்பட்டார் ஒருவர் சித்திரவதை செய்யப்பட்டுத் தகிக்கப்பட்டார். சாஸ்திரங்கொண்டு சமயவாதஞ்செய்யமுயன்ற புறூனோ என்பவர் ரோமபுரியிலே எரிக்கப்பட்டார். 1619௵ கலைஞானமறிந்து சமயபேதஞ் செய்யமுயன்ற வானினி என்பானுடைய நாக்கைக்கிழித்து, தூலூஎன்ற நகரத்திலே அவனுடலை நெருப்பிலிட்டுப் பொரித்துவிட்டார்.

"Cecus Asculanus, a physician, was burned in A. D. 1337, at Florence, in consequence of some misunderstood mechanical experiments. John Huss was burned A. D. 1415, and his friend, Jerome, in 1416, for heresy. Savonarola, a monk, was tortured and burned in A. D. 1498, for trying to reform abuses. Giordano Brunow was burned at Rome, A. D. 1600, for scientific heresy; and Vanini




# கடன்பட்ட கந்தன்கதை.

பிரதி 1-க்கு விலை பை ஆறு.

---

# புருஷத்துவேஷ பூதகி கதை.

(அல்லது)

மதனகாமனியின்சரித்திரம்.

பிரதி 1-க்கு விலை அணா ஒன்று.

---

## IN THE PRESS.

---

மனமோகனராஜன் சரித்திரம்.

பிரதி 1-க்கு விலை அணா ஒன்று.

☞ இந்நூல் வாசிப்பதற்கு வெகு நேர்த்தியாகவும், இனிமையாகவும் இருப்பதுமன்றி, சிறியோர் வாசிக்குந் தன்மையாய்ச் செந்தமிழில் எளிய நடையில் எழுதியிருக்கிறது.